30th August 1961]

*Scholarship*

*** 1521 *Q*.—SRI S. M. ANNAMALAI :** *கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) ஆரம்பப் பள்ளிகளில் வேலை செய்யும் ஆசிரியர்களின் பிள்ளைகளின் கல்லூரி படிப்பிற்கு மத்திய சர்க்கார் உதவி செய்ய முன்வந்துள்ளார்களா ?*

*(இ) அப்படியாயின், அதன் விவரமென்ன ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir, The Government of India have instituted from the current year a scheme of scholarships for the benefit, among others, of children of Elementary school teachers, taking up post-Matriculation studies.

(இ) A statement[a] is laid on the table of the House.

**SRI S. M. ANNAMALAI :** *மேஜை மேல் வைக்கப்பட்டுள்ள அறிக்கையில் முதல் வகுப்பில் பாஸ் செய்திருந்தால் அல்லது 60 மார்க்குகளுக்கு மேற்பட்டிருந்தால்தான் ஸ்காலர்ஷிப் கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறதே. ஆசிரியர்களுடைய பிள்ளைகள் பாஸ் செய்தாலே போதும், அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் தரலாம் என்பதைப் பற்றி சர்க்கார் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வரக் கூடாதா ?*

**THE HON. SRI C. SUBRAMANIAM :** *இதிலே திறமையாகப் படித்து பாஸ் செய்கிறவர்களுக்கு இந்த உதவி கொடுக்கவேண்டும் என்பதும் எல்லோரும் திறமையாகப் படிக்கவேண்டும் என்பதற்காகவும் ஒரு ஏற்பாடு. பாஸ் செய்தால் போதும் என்று வைத்தால் ஊக்கம் இல்லாமல் போய்விடும். அங்கத்தினரும் சேர்ந்து ஊக்கமாகப் படிப்பதற்கு ஏற்பாடு செய்யாமல், படிக்காமல் பாஸ் செய்ய வேண்டும், பாஸ் செய்யாமல் வேலை கொடுக்கவேண்டும் என்ற திட்டத்திற்கு ஆதரவு கொடுக்க மாட்டார் என்று நினைக்கிறேன்.*

SRI K. VINAYAKAM : While appreciating this generous institution of scholarship for post-Matriculate students, who are children of the primary school teachers, is the Hon. Minister aware of the fact that this is a scholarship awarded by the Government of India where students belonging to different States will have to compete to get this scholarship and our examiners in this State are a bit conservative and niggardly in awarding marks when compared to the examiners of other States, with the result our students suffer from an handicap in competing with the students of other States. So, will the Government issue orders to liberalize the scheme of issue of marks to our students?

THE HON. SRI C. SUBRAMANIAM : Forty-seven scholarships have been allotted to this State. Therefore, the competition will be within the State.

---

**a Printed as Appendix III on pages 421–422 infra.**

[30th August 1961

Sri T. S. RAMASWAMI : May I know whether the rules have been finalized for the issue of these things and whether applications have been called for from the students because there are instances where rules have not been finalized and the award of scholarship is delayed for more than two years, as in the case of the children of the political sufferers?

The Hon. Sri C. SUBRAMANIAM : This has come into vogue only during this year and I think all the procedures have already been finalized.

**Sri M. KALYANASUNDARAM :** நம்முடைய ராஜ்யத்திலே ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் கிட்டத்தட்ட ஒரு லட்சம் பேர்கள் இருக்கிறார்கள். இந்த 47 ஸ்காலர்ஷிப் போதுமானதா? இதை அதிகப்படுத்தவேண்டும் என்று மத்திய சர்க்காருக்குச் சிபாரிசு செய்திருக்கிறார்களா?

**The Hon Sri C. SUBRAMANIAM :** இது ஆரம்பம். மொத்தம் 500 ஸ்காலர்ஷிப் இந்தியா பூராவிற்கும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இங்கு எத்தனை ஆசிரியர்கள் இருக்கிறார்கள் என்று கணக்கிட்டு, ஒவ்வொரு ராஜ்யத்திலும் உள்ள ஆசிரியர்கள் எத்தனை என்று கணக்கிட்டு, விதாசாரப் பிரகாரம் பிரித்துக் கொடுத்திருக்கிறார்கள். 500 ஸ்காலர்ஷிப் போதாது என்று ஒத்துக்கொள்கிறேன். இதை போகப்போக அதிகரிக்கலாம்.

*Schools run on religious basis*

*** 1522 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மத அடிப்படையில் நடத்தப்பட்டு வரும் எல்லா ஆரம்ப பாடசாலைகளையும், உயர்தர பாடசாலைகளையும் சர்க்காரே எடுத்து நடத்த உத்தேசமுண்டா?

The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.

*** 1523 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதத்தின் பெயரால் நடத்தப்பட்டுவரும் பாடசாலைகளின் பெயர்களை மாற்றுவதற்கான உத்திரவிடும் உத்தேசமுண்டா?

**The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.**

*Deaf-mutes (Kurichikulam village)*

* 1524 *Q.*—Sri N. MARUDACHALAM (On behalf of Sri N. K. PALANISAMI) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have called for any report from the Director of Medical Services about the deaf mutes in Kurichikulam Village in Mannar Panchayat, Tirunelveli District: and